10897

AL/2017/44/T-I





අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ඉස්ලාම් I
இஸ்லாம் I
Islam I

44 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
Two hours

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என எண்ணிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** இஸ்லாத்தின் நம்பிக்கைக் கோட்பாடு தொடர்பான கலை
(1) இல்முத் தப்ஸீர் (2) இல்முல் அகீதா (3) இல்முல் ஹதீஸ்
(4) இல்முல் பிக்ஹ் (5) இல்முல் பராஇழ்

**2.** 'அல்லாஹ் மிகவும் மன்னிப்பவன்' என்ற பொருளை உணர்த்தும் திருநாமம்
(1) அல்-கப்பார் (2) அஸ்-ஸலாம் (3) அஸ்-ஸத்தார்
(4) அல்-குத்தூஸ் (5) அர்-ரஹ்மான்

**3.** எமது நாட்டுக்கு அரேபியர் இட்ட பெயர்
(1) தப்ரபேன் (2) ஸ்ரீ லங்கா (3) ஸயலான்
(4) இலங்கை (5) தாமிரபரணி

**4.** இலங்கையில் அரேபியரின் ஆரம்ப குடியேற்றங்கள் காணப்பட்ட இடங்கள் யாவை ?
(1) மன்னார், கொழும்பு, புத்தளம் (2) கண்டி, புத்தளம், அம்பாந்தோட்டை
(3) திருகோணமலை, மன்னார், அக்குரணை (4) காலி, கொழும்பு, கண்டி
(5) புத்தளம், கிண்ணியா, அம்பாந்தோட்டை

**5.** பற்றற்ற வாழ்வைக் குறிக்கும் சொல்
(1) வரஉ (2) ரிழா (3) தவக்குல் (4) ஸுஹ்து (5) மஹப்பத்

**6.** 'கலீமுல்லாஹ்' என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்படும் இறைதூதர்
(1) நபி ஈஸா (அலை) (2) நபி மூஸா (அலை)
(3) நபி இப்ராஹீம் (அலை) (4) நபி முஹம்மது (ஸல்)
(5) நபி நூஹ் (அலை)

**7.** மறுமை நாளைக் குறிக்கும் பெயர் **அல்லாதது**
(1) யவ்முத்தீன் (2) யவ்முல் ப..ஸ் (3) யவ்முத்தர்வியா
(4) யவ்முல் கியாமா (5) யவ்முல் ஹிஸாப்

**8.** 'கல்புல் குர்ஆன்' என அழைக்கப்படும் சூரா
(1) பாதிஹா (2) பகரா (3) முல்க் (4) கஹ்பு (5) யாஸீன்

**9.** முஸ்லிம்களது விவாகரத்தை உறுதிப்படுத்தும் நிறுவனம்
(1) வக்பு சபை (2) முஸ்லிம் சமய, பண்பாட்டுத் திணைக்களம்
(3) காழி நீதிமன்றம் (4) ஜம் இய்யதுல் உலமா
(5) நீதவான் நீதிமன்றம்

**10.** அல்-குர்ஆனை வழமையாக ஓதுவதற்குப் பிரிக்கப்படும் ஒழுங்கைச் **சாராதது**
(1) ஸூரா (2) மன்ஸில் (3) ஜுஸ்உ (4) நிஸ்பு (5) ருகூஉ

**11.** ஹஜ்ஜுக்கும் உம்ராவுக்குமிடையிலான வேறுபாடு
(1) இஹ்ராம் (2) தவாப் (3) ஸ..யு
(4) ஹல்கு செய்தல் (5) அறபாவில் தரித்தல்

[பக். 2 ஐப் பார்க்க

**12.** 'பெரும்பாவம் செய்தோர் நரகவாசிகள்' என்ற கொள்கையைக் கொண்டோர்
(1) கவாரிஜ் (2) ஷீஆக்கள் (3) மு.்.தஸிலாக்கள்
(4) கதரிய்யாக்கள் (5) ஜபரிய்யாக்கள்

**13.** 19ஆம் நூற்றாண்டில் முஸ்லிம் சமூகத்தின் எழுச்சியை இலக்காகக் கொண்டு அறிஞர் சித்திலெப்பை, ஐ.எல்.எம். அஸீஸ் ஆகியோரால் வெளியிடப்பட்ட பத்திரிகைகள் முறையே
(1) முஸ்லிம் பாதுகாவலன், சமரசம் (2) முஸ்லிம் நேசன், துலூஉல் ஹக்
(3) அல்-ஹஸனாத், இஸ்லாமிய சிந்தனை (4) முஸ்லிம் நேசன், முஸ்லிம் பாதுகாவலன்
(5) துலூஉல் ஹக், சமரசம்

**14.** 'இஹ்யா உலூமுத்தீன்' என்ற நூலின் ஆசிரியர்
(1) இமாம் புஹாரி (ரஹ்) (2) இமாம் கஸ்ஸாலி (ரஹ்)
(3) இமாம் நவவி (ரஹ்) (4) இமாம் ஷாபிஈ (ரஹ்)
(5) இமாம் ராபிஈ (ரஹ்)

**15.** தற்காலிக மஹ்ரமியாகக் கருதப்படுபவர்
(1) தந்தையின் சகோதரி (2) மனைவியின் தாய் (3) தாயின் சகோதரி
(4) மகனின் மனைவி (5) மனைவியின் சகோதரி

**16.** அபுல் ஹஸன் அஷ்அரி பற்றிய **தவறான** கருத்து
(1) மு.்.தஸிலா இயக்கத்தின் ஸ்தாபகர்.
(2) மு.்.தஸிலா இயக்கத்துக்கு எதிரானவர்.
(3) 'பெரும்பாவம் செய்தோர் காபிர் அல்லர்' என்ற கருத்துடையவர்.
(4) 'அல்-குர்ஆன் படைக்கப்பட்டது' என்ற கருத்தை மறுத்தவர்.
(5) இமாம் அஹ்மது இப்னு ஹன்பலின் வழி நின்றவர்.



**17.** மேல்வருவனவற்றுள் சிறிய வகை ஷிர்க்கில் உள்ளடங்குவன யாவை ?
(1) மந்திரித்தல், சூனியம் செய்தல், சூரியனை வணங்குதல்
(2) சோதிடம் பார்த்தல், வசியம் செய்தல், விக்கிரக வணக்கம்
(3) சகுணம் பார்த்தல், மந்திரித்தல், வசியம் செய்தல்
(4) சூனியம் செய்தல், அல்லாஹ் அல்லாதவற்றின் பெயரில் பலியிடல், விக்கிரக வணக்கம்
(5) நூல்கட்டுதல், மந்திரித்தல், வசியம் செய்தல்

**18.** முஜ்தஹிதுகள் பெற்றிருக்க வேண்டிய தகைமை **அல்லாதது**
(1) முஸ்லிமாக இருத்தல்
(2) அல்-குர்ஆன், ஸுன்னா தொடர்பான விடயங்களில் புலமை பெற்றிருத்தல்
(3) பன்மொழித் திறமை பெற்றிருத்தல்
(4) ஸஹாபாக்கள், தாபிஈன்களது பத்வாக்களை அறிந்திருத்தல்
(5) பருவ வயதை அடைந்தவராகவும் புத்தி தெளிவானவராகவும் இருத்தல்

**19.** 'கபாஅத்' என்பது
(1) திருமணப் பேச்சு (2) மணமகனின் விருப்பம்
(3) வாழ்க்கைத் துணையைத் தெரிதல் (4) நிகாஹ்வின்போது இடம்பெறும் பிரசங்கம்
(5) பொருத்தப்பாடு

**20.** மேல்வரும் மார்க்க அறிஞர்களில் இலங்கையில் அறபுத் தமிழ் வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்தவர்
(1) மாப்பிள்ளை ஆலிம் (2) உமர் ஹஸ்ரத்
(3) அப்துல் ஹமீத் பக்ரி (4) மஸ்ஊத் ஆலிம்
(5) அப்துல் ஹமீத் நூரி

**21.** முஸ்லிம் அரசில் வாழ்ந்த அரபியர் **அல்லாத** முஸ்லிம் பிரஜைகள் எவ்வாறு அழைக்கப்பட்டனர் ?
(1) ஹர்பி (2) திம்மி (3) மவாலி (4) முஷ்ரிக் (5) மு.்.மின்

**22.** நபி (ஸல்) அவர்கள் நவின்றதாக தாபிஈ ஒருவர் அறிவிப்புச் செய்யும் ஹதீஸ்
(1) முன்கதிஃ (2) மு.அல்லக் (3) முல்தரப்
(4) முதல்லஸ் (5) முர்ஸல்

**23.** அல்-அஸ்ஹர் பல்கலைக்கழகம் அமைந்துள்ள நாடு
(1) சிரியா (2) லெபனான் (3) எகிப்து
(4) சவூதி அரேபியா (5) ஈராக்

**24.** 'மௌனம் சம்மதத்திற்கு அறிகுறி' என்ற எடுகோளை மையப்படுத்தி எழுந்த இஜ்மா
(1) சுகூதி (2) ஸரீஹ் (3) அக்ஸரிய்யா (4) முரக்கப் (5) கவ்லி

**25.** அஸ்லின் பொதுத்தன்மையும் பரஉ இன் பொதுத்தன்மையும் சமநிலையில் அமையும் கியாஸ்
(1) அல்-அத்னா (2) அல்-அவ்லா (3) அல்-முஸாவி
(4) அல்-ஜலியி (5) அல்-ஹபி

**26.** சிரச்சேதத்தைத் தண்டனையாகப் பெறும் குற்றவாளி
(1) திருடன் (2) நயவஞ்சகன் (3) பொய்யுரைப்பவன்
(4) கொலையாளி (5) கொள்ளையடிப்பவன்

**27.** இஸ்லாம் அனுமதித்துள்ள பொருளாதார நடவடிக்கைகளில் இரவல் கொடுத்தலைக் குறிக்கும் அறபுச் சொல்
(1) இஆரா (2) முஷாரகா (3) ரிபா
(4) முழாரபா (5) கப்பாரா

**28.** ஸகாத் பெறத் தகுதியான எட்டு பிரிவினருள் ஆமில் எனப்படுவோர்
(1) ஏழைகள்
(2) கடனாளிகள்
(3) ஸகாத்தை சேகரித்து விநியோகம் செய்யும் பணியில் ஈடுபடுவோர்
(4) வழிப்போக்கர்கள்
(5) ஜிஹாதில் ஈடுபடுவோர்

**29.** பிக்ஹுத்துறை அறிஞர்களை மாத்திரம் உள்ளடக்கியுள்ள தொகுதி
(1) அஹ்மத் (ரஹ்), ஸுஹ்ரி (ரஹ்), மாலிக் (ரஹ்)
(2) ஷாபிஈ (ரஹ்), நஸாஈ (ரஹ்), அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்)
(3) மாலிக் (ரஹ்), அபூ ஹனீபா (ரஹ்), அபூ யூசுப் (ரஹ்)
(4) அவ்ஸாஈ (ரஹ்), நவவி (ரஹ்), கஸ்ஸாலி (ரஹ்)
(5) மாலிக் (ரஹ்), அபூ தாவூத் (ரஹ்), முஸ்லிம் (ரஹ்)



**30.** நபிமார்களிடம் இருக்க வேண்டிய பண்புகளாவன
(1) கித்பு, கியானத், கித்மான், பலாதத்
(2) ஸித்குன், கியானத், பலாதத், தப்லீக்
(3) ஸமீஉன், பஸீருன், முரீதுன், ஆலிமுன்
(4) ஸித்குன், அமானத், பதானத், தப்லீக்
(5) அஜ்ஸுன், பகமுன், மய்யிதுன், அஸம்முன்

**31.** மேல்வருவனவற்றுள் இமாம் முஸ்லிம் அவர்கள் தொடர்பில் **பிழையான** கூற்று
(1) அவரது இயற்பெயர் முஸ்லிம் என்பதாகும்.
(2) அவர் மதீனாவில் பிறந்தார்.
(3) அவரது நூல் 'ஸஹீஹைன்' என்பதில் அடங்கும்.
(4) பத்ஹுல் பாரி என்பது அவரது நூலுக்கான விளக்கவுரையாகும்.
(5) அவர் ஹிஜ்ரி: 206 இல் நைஸாபூரில் இறந்தார்.

**32.** முதலாம் அகபா உடன்படிக்கையின் பின்னர் தஃவாப் பணிக்காக மதீனாவுக்கு அனுப்பப்பட்ட நபித் தோழர்
(1) முஸ்அப் (ரழி) (2) அனஸ் (ரழி)
(3) அபூஹுரைரா (ரழி) (4) தல்ஹா (ரழி)
(5) அல்கமா (ரழி)

**33.** ஹஜ்ஜின்போது ஜெம்ராக்களில் கல் எறிவது
(1) பர்ளு (2) வாஜிப் (3) ஸுன்னத் (4) ஜாயிஸ் (5) முஸ்தஹப்

**34.** வாரிசுகளில் சிலரின் காரணமாக வேறு சிலருக்கு பங்கு கிடைக்காமல் போவதைச் சுட்டும் சொல்
(1) அல்-ஹஜ்ப் (2) ஹஜ்ப் நுக்ஸான் (3) ஹஜ்ப் ஹிர்மான்
(4) ஸாகித் (5) மஹ்ஜுப்

**35.** மனிதன் நிறைவேற்ற வேண்டிய கிலாபத், இபாதத், இமாரத் பணிகள் சில வருமாறு:
A - பிரதான கடமைகளை நிறைவேற்றல்
B - நாட்டுக்கு விசுவாசமாக நடத்தல்
C - ஏனைய சமூகங்களுடன் இணக்கமாக வாழ்தல்
D - சுற்றாடலை மாசுபடாமல் பாதுகாத்தல்
E - இயற்கை வளங்களைப் பாதுகாத்தல்

இவற்றுள் இமாரத் பணிகளுடன் தொடர்பானவை
(1) A, B (2) B, C (3) B, D (4) C, D (5) D, E

[பக். 4 ஐப் பார்க்க

10897

**36.** குலபாஉர் ராஷிதூன்கள் தொடர்பான சில கூற்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

A - 'யமாமா போரைத் தொடர்ந்து அல்-குர்ஆனைத் தொகுக்க வேண்டும்' என்ற கருத்தை முன்வைத்தவர்.
B - 'பைதுல்மாலை' அறிமுகப்படுத்தியவர்.
C - உஸாமாவின் தலைமையில் ஷாம் தேசத்திற்கு படையை அனுப்பியவர்.
D - அல்-குர்ஆனை பிரதிசெய்து இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் பல பகுதிகளுக்கும் அனுப்பியவர்.
E - 'அல்பாறூக்' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றவர்.
F - இப்னு முல்ஜிம் என்ற யூதனால் கொலை செய்யப்பட்டவர்.

இவற்றுள் கலீபா உமர் (ரழி) அவர்களுடன் தொடர்புடைய அம்சங்களாவன

(1) A, B, E (2) A, B, F (3) A, C, E (4) C, D, E (5) D, E, F

**37.** ஷரீஆ சட்டத்தின் மூலம் ஏற்கனவே உறுதியாக நிறுவப்பட்ட ஒரு விடயத்தை அல்லது மறுக்கப்பட்ட ஒரு விடயத்தை, தொடர்ந்து அதே நிலையில் வைத்துக் கொள்வது

(1) உர்பு (2) ஷரஉ மன்கப்லனா (3) இஸ்திஹ்ஸான்
(4) இஸ்திஸ்ஹாப் (5) கியாஸ் அத்னா

**38.** விவாகரத்தின்போது கணவன் மனைவிக்கு வழங்க வேண்டுமென ஷரீஆ போதிக்கும் கொடுப்பனவு

(1) நபகா (2) கிஸ்வா (3) மதாஉ
(4) ஸகன் (5) ஸதகா

● **39** தொடக்கம் **42** வரையிலுள்ள ஒவ்வொரு வினாவிலும் **X, Y** என்னும் நிரல்களின் கீழ் தரப்பட்டுள்ள தகவல்கள் ஏதேனும் ஒரு வகையில் ஒன்றுடனொன்று தொடர்புபட்டவை. அதன்படி **Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுடன் சரியாகத் தொடர்புபடுத்தும்போது பொருத்தமாக அமையும் சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**39.**

| X | Y |
|---|---|
| (i) ஹுதாத் | A – அல்வகாலா |
| (ii) ரஹ்ன் | B – முபஸ்ஸல் |
| (iii) ஷிர்க் | C – ஹஸன் |
| (iv) முஜ்மல் | D – கிஸஸ் |
| (v) ஸஹீஹ் | E – குப்ர் |

(1) BCDEA (2) CDEAB (3) DAEBC (4) DEABC (5) DEBCA

**40.**

| X | Y |
|---|---|
| (i) கிலாபத் | A – மாலிக் |
| (ii) த.'.வத் | B – மதனி |
| (iii) மக்கி | C – மஸ்லஹா முர்ஸலா |
| (iv) உர்பு | D – அல்-ஜிஹாத் பில் லிஸான் |
| (v) பிக்ஹு | E – இமாரத் |

(1) ABCDE (2) BDCAE (3) DBCAE (4) EBCAD (5) EDBCA

**41.**

| X | Y |
|---|---|
| (i) தங்கம் | A – ஸுன்னா |
| (ii) அவ்ரத் | B – பஸ்கு |
| (iii) வாஜிப் | C – பட்டு |
| (iv) குல்உ | D – ஹிஜாப் |
| (v) ரஜஈ | E – பாயின் |

(1) CABDE (2) CEABD (3) CEADB (4) CDABE (5) DECAB

**42.**

| X | Y |
|---|---|
| (i) ஜாமிஉல் பயான் | A – செய்யத் குதுப் |
| (ii) தப்ஸீர் மனார் | B – ஸமக்ஷரி |
| (iii) பீழிலாலில் குர்-ஆன் | C – ஸுயூதி |
| (iv) அல்-கஷ்ஷாப் | D – ஜரீர் அத்தபரி |
| (v) தப்ஸீர் ஜலாலைன் | E – ரஷீத் ரிழா |

(1) ABCDE (2) BDCEA (3) CDEAB (4) DAECB (5) DEABC

[பக். 5 ஐப் பார்க்க

- **43** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்களில் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள சோடிக் கூற்றுகளுக்குப் பின்வரும் (1), (2), (3), (4), (5) என்பனவற்றில் மிகப் பொருத்தமானதைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தைக்** குறிப்பிடுக.

| இலக்கம் | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| (1) | சரியானது. | சரியானது. |
| (2) | பிழையானது. | சரியானது. |
| (3) | சரியானது. | பிழையானது. |
| (4) | பிழையானது. | பிழையானது. |
| (5) | சரியானது. | முதலாம் கூற்றை மேலும் விளக்குகிறது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 43. | அடிப்படையில் எல்லாம் ஹலாலானவை. | அல்லாஹ் விரும்பினால் ஷிர்க் செய்வதை மன்னிப்பான். |
| 44. | ஹதீஸ்களில் முதவாதிரான ஹதீஸ்கள் ஏற்றுக் கொள்ளப்படாதவையாகும். | மூஈபான ஹதீஸ்களையும் சட்டம் இயற்றுவதற்குப் பயன்படுத்தலாம். |
| 45. | முஷாரகா, முழாரபா, முராபஹா என்பன இஸ்லாம் அனுமதித்துள்ள கூட்டு வியாபார ஒழுங்குகளாகும். | வட்டி கொடுத்தல், வாங்குதல் என்பன வணிக முறையாக அமைய முடியும். |
| 46. | பிக்ஹுத் துறையில் ஈடுபடும் அறிஞர்கள் ஹதீஸ் துறையில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். | இமாம் மாலிக் (ரஹ்), இமாம் ஷாபிஈ (ரஹ்) ஆகியோர் ஹதீஸ், பிக்ஹு ஆகிய துறைகளில் தேர்ச்சி பெற்றிருந்தனர். |
| 47. | 'அல்-ஜிஹாத் பில் மால்' என்பது நாவினால் செய்யும் போராட்டமாகும். | 'அல்-ஜிஹாத் பின் நப்ஸ்' என்பது பொருளினால் செய்யும் போராட்டமாகும். |
| 48. | கர்ப்பிணியான பெண்ணின் இத்தாக் காலம் நான்கு மாதங்களும் பத்து நாட்களுமாகும். | தலாக் சொல்லப்பட்ட பெண்ணின் இத்தாக் காலம் மூன்று சுத்தங்களாகும். |
| 49. | ஜிஸ்யா வரி திம்மிகளுக்கான பாதுகாப்பை உத்தரவாதப்படுத்துகின்றது. | வராஸத் சொத்தில் காபிரான மகனுக்கும் பங்கு வழங்க வேண்டும். |
| 50. | இலங்கைக்கும் அரேபியாவுக்குமிடையிலான உறவு இஸ்லாத்தின் தோற்றத்திற்கு முன்பே உருவானதாகும். | இலங்கையில் இஸ்லாத்தின் வளர்ச்சிக்கு இந்திய உலமாக்கள் பங்களிப்புச் செய்துள்ளனர். |

* * *

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ඉස්ලාම් II
இஸ்லாம் II
Islam II

44 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

**அறிவுறுத்தல்கள் :**

※ பகுதி **I** இலிருந்து **இரண்டு** வினாக்களையும் பகுதி **II** இலிருந்து **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** பின்வரும் சோடிச் சொற்களுக்கிடையிலான வேறுபாட்டை எடுத்துக்காட்டுக.
   (i) இலாஹ் - ரப்பு
   (ii) குப்ர் - ரித்தத்
   (iii) முஷ்ரிக் - முல்ஹித்
   (iv) நுபுவ்வத் - ரிஸாலத்

**2.** (i) இஸ்லாத்தில் திருமணம் விதியாக்கப்பட்டிருப்பதேன் ?
   (ii) திருமணத்தின் பிரதான அம்சங்களை எடுத்துக்காட்டுக.
   (iii) விவாகரத்தைத் தவிர்ப்பதற்கான வழிகளை விளக்குக.
   (iv) இத்தாவின் தாற்பரியங்களை எடுத்துக்காட்டுக.



**3.** (i) அகீதா என்றால் என்ன ?
   (ii) அஹ்லுஸ்ஸுன்னா அகீதாவை தெளிவுபடுத்துக.
   (iii) ஒன்றுக்கொன்று முரண்பட்ட அகீதாக்கள் தோன்றக் காரணம் என்ன ?
   (iv) மு.்.தஸிலாக்களின் பிரதான கோட்பாடுகளைத் தருக.

## பகுதி II

**4.** (i) பிக்ஹுத் துறையில் கருத்து வேறுபாடுகள் தோன்றுவதற்கு ஏதுவான காரணிகளை விளக்குக.
   (ii) இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்களது பிக்ஹுத் துறைப் பங்களிப்பைச் சுருக்கமாக விளக்குக.

**5.** பின்வருவனவற்றைச் சுருக்கமாக விளக்குக.
   (i) அஸ்பாபுன் நுஸூல்
   (ii) ஷிர்கின் வகைகள்
   (iii) இலங்கையில் காழி நீதிமன்றங்கள்
   (iv) மறுமை நம்பிக்கை மனிதனில் ஏற்படுத்தும் தாக்கம்

**6.** பின்வருவனவற்றை விளக்குக.
   (i) ஆடை, அணிகலன்கள் பற்றிய இஸ்லாமிய சட்ட விதிகள்
   (ii) போதைப்பொருள் பாவனையினால் ஏற்படும் சமூகச் சீரகேடுகள்

**7.** (i) 'தஸ்கியதுன் நப்ஸ்' என்ற தொடரை விளக்குக.
   (ii) ஆன்மீக வளர்ச்சிக்கான பண்புகள் **நான்கினை** எடுத்துக்காட்டி, சுருக்கமாக விளக்குக.

**8.** (i) அரேபியர் இலங்கைக்கு வருகைதந்தமைக்கு ஏதுவான காரணிகளை விளக்குக.
   (ii) இலங்கையின் தேச நலனுக்கு முஸ்லிம்கள் ஆற்றியுள்ள பங்களிப்புகளை மதிப்பிடுக.

※ ※ ※